# ஆழ்வார் திவ்ய பிரபந்தத்
# திருவேங்கடப் பாசுரங்கள்




டாக்டர் பொன். சௌரிராஜன்

திருமலை திருப்பதி தேவஸ்தான வெளியீடு
திருப்பதி

# ஆழ்வார் திவ்ய பிரபந்தத் திருவேங்கடப் பாசுரங்கள்

தொகுத்தவர் :

**டாக்டர் பொன். சௌரிராஜன்,** எம்.ஏ., பிஎச்.டி.,

*தமிழ்ப் பேராசிரியர் (ஓய்வு)*

*திருவேங்கடவன் பல்கலைக்கழகம், திருப்பதி-2.*




***திருமலை திருப்பதி தேவஸ்தான வெளியீடு***

***திருப்பதி***

**2008**

**ALWAR DIVYA PRABANDHA**
**TIRUVENGADA PASURANGAL**

*BY*

**Dr. P. SOWRIRAJAN,** M.A., Ph.D.,

T.T.D. Religious Publication Series No. 4
(Under Alwar Divya Prabandha Project)

© All Rights Reserved

First Edition : 1991

Reprint : 2008

Copies: 2,000

*Published by:*

**Sri K.V. Ramanachary,** I.A.S.,
Executive Officer,
TirumalaTirupati Devasthanams,
Tirupati.

*Printed at :*

T.T. Devasthanams Press,
Tirupati.

# அணிந்துரை

உலகத்து உயிர்கள் உய்யும் பொருட்டு வேதம், உபநிடதம், இதிகாசம் புராணம் எனப் **பல** நூல்களை **அருள்வித்தான்.** திருமால், மேலும் அவதாரம் பல தானே செய்தான். அவையும் போதாதென்று மானைக்காட்டி மானைப் பிடிப்பாரைப் போலத் தம் அம்சங்களாக ஆழ்வார்கள் பன்னிருவரை இந்நிலவுலகில் அவதரிக்கச் செய்தான். அந்த ஆழ்வார்கள் அனைவரும் திருமால் தந்த பக்தியாகிய ஞான வெள்ளத்தில் ஆழங்கால்பட்டு அவனை அநுபவித்தனர். அந்த அநுபவம் பொங்கிப் பெருகிப் பாசுரங்களாக வடிவெடுத்தன. அவை திருமால் தம் பரத்துவத்தையும், திருக்கல்யாண குணங்களையும், அவர்க்குப் பணி செய்யும் அடிமைத் திறத்தையும், அடியார்களின் சிறப்பையும், பக்திப் பாங்குகளையும் எடுத்துரைப்பன. அவையனைத்தும் நாதமுனிகள் என்னும் ஆசார்யரால் தொகுக்கப்பெற்று நாலாயிர திவ்ய ப்ரபந்தம் எனப்பெயர் பெற்றது. அவற்றுள் இருநூற்று இரண்டு பாசுரங்கள் திருவேங்கடமுடையானைப் பற்றியன. அவற்றை அருளியவர்கள் ; பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசைப்பிரான், நம்மாழ்வார், குலசேகரப்பெருமாள், பெரியாழ்வார், திருப்பாணாழ்வார், திருமங்கையாழ்வார் மற்றும் ஆண்டாளும் ஆவர்.

இவ்வாழ்வார்கள் திருவேங்கடமுடையானுக்குச் செய்த மங்களாசாசனப் பாசுரங்களை திருமலைக்கு வருகைதரும் பக்தர்கள் **பாராயணம்** செய்து, பாடிப்பரவி ஆழ்வார் வழியில் திருவேங்கடமுடையான் அருட்பேற்றுக்கு ஆளாதல் வேண்டும் என்ற நோக்கத்தோடு தற்போது அப்பாடல்களைக் கொண்டு திகழும் இக்கையடக்க நூலினை தி.தி. தேவஸ்தானம் வெளியிட்டுள்ளது.

**கே.வி. ரமணாச்சாரி,** ஐ.ஏ.எஸ்.,

*செயலாட்சித்தலைவர்*

*தி.தி. தேவஸ்தானம், திருப்பதி.*

திருப்பதி,

20-2-08.

# முதலாழ்வார்கள் – மூவர்

## பொய்கையாழ்வார்



பொய்கையாழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் ஆகிய மூவரும் ஒரே காலத்தவர். இராமர், இலக்குமணன், பரதர் போல் அடுத்தடுத்து ஒரே மாதத்தில் அவதரித்தவர்களாவர். திருக்கோவலூர் ம்ருகண்டு முனிவருடைய ஆச்ரமத்தில் இடைகழியில் மழை நாள் முன்னிரவில் மூவர்க்கும் திருமால் ஒரு சேரக்காட்சி தந்தருளினார். மூவர் சேர்த்தியால் உற்ற திருமால் சோபையைக் கண்டு ஆழ்வார்கள் அநுபவித்து அந்தாதி பாடியருளினார்கள். பொய்கையாழ்வார், காஞ்சிபுரத்தில் சொன்னவண்ணம் செய்த பெருமாள் சந்நிதிக்கு வடபுறம் உள்ள பொய்கையில் மலர்ந்த தாமரை மலரில் ஐப்பசி மாத திருவோணத்தில் அவதரித்தார். இவர் திருமாலின் பாஞ்சஜன்யம் அம்சமாவர்.

இவர் அருளியது முதல் திருவந்தாதி என்னும் பிரபந்தமாகும். இதில் பத்துப்பாசுரங்கள் மானிடரின் வினைகள் அனைத்தையும் தீர்த்து அருள் செய்யும் திருவேங்கடவனின் திறத்தையும், திருவேங்கடமலையின் அழகையும் பாடுபொருளாகக் கொண்டன.



## பூதத்தாழ்வார்

இன்று மகாபலிபுரம் என்று வழங்கப்பெறும் திருக்கடன் மல்லையில் பந்தலில் படர்ந்திருந்த குருக்கத்திக் கொடியீன்ற மலர் ஒன்றில் ஐப்பசி மாத

அவிட்டத்தில் அவதரித்தவர் பூதத்தாழ்வார் ஆவர். இவரைத் திருமாலின் பஞ்சாயுதங்களுள் ஒன்றாகிய கௌமோதகீ என்னும் கதையின் அம்சமாக ஆன்றோர் கொள்வர்.

இவர் தாம் திருமால் பக்தியில் பெற்ற அநுபவத்தை இரண்டாந்திருவந்தாதியாக அருளிச்செய்துள்ளார். அதன்கண் அமைந்துள்ள பாசுரங்களில் ஒன்பது, திருவேங்கடவனின் சுவாமித்துவத்தையும், திருமலையின் பொலிவையும் எடுத்துரைக்கின்றன.

## பேயாழ்வார்



திருவல்லிக்கேணிக்கருகில் திகழும் மைலாப்பூரில் ஒரு கிணற்றில் மலர்ந்த செவ்வல்லி மலரில் ஐப்பசி சதயத்தில் அவதரித்தவர் பேயாழ்வார். இவர் திருமாலின் பஞ்சாயுதங்களுள் ஒன்றான நாந்தகம் என்னும் வாளின் அம்சமாவர். திருமால் பக்தியில் ஆழங்கால்பட்டுத் தம்மை இழந்து ஆடிப்பாடி அலங்கோலமாகப் பேய்போல திரிந்தமையாலும், பேயாழ்வார் என்று அழைக்கப்பட்டார். இவர் பாடியருளியது மூன்றாந் திருவந்தாதி. இதில் பத்தொன்பது பாசுரங்கள் திருவேங்கடவனை நினைத்து பாடப்பெற்றன. திருவேங்கடவனின் பரத்துவ நிலை, அவதார நிலை ஆகியவற்றின் பொருண்மையாக இவை அமைந்துள்ளன. இதில் திருமலையின் இயற்கை எழிலும் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது.

## திருமழிசையாழ்வார்

இவர் பார்க்கவ முனிவரின் புதல்வர். தைத்திங்கள் மக நட்சத்திரத்தில் திருமழிசையில் அவதரித்தார். பகவத்ஸங்கல்பத்தால்



பார்க்கவ முனிவர் கனகாங்கி என்னும் கட்டழகி பால் காமுற்று அதன் காரணமாகப் பிறந்தவர் இவர். பிண்டரூபமாகப் பிறந்த அக்குழந்தையை அருகிருந்த பிரப்பம்புதர் ஒன்றில் எறிந்துவிட்டுத் தன்னுலகு எய்தினாள். பிரப்பம் புதரில் எறியப்பட்ட முனிகர்ப்பமான பிண்டம் விரைவிலேயே ஓர் ஆண் குழந்தை வடிவமாகி உயிர்பெற்று பசி தாகத்தாலே அழுதுகொண்டிருக்க, அத்தலத்தில் இருக்கும் ஜகந்நாதப்பெருமாள் பிராட்டியுடன் காட்சி தந்து இக்குழந்தையைத் தேற்றினர். பெருமாள் மறைந்தவுடன் அழுகை மறுபடியும் தொடர. அக்குரல் கேட்டு, அங்குப் பிரம்பு அறுக்க வந்த திருவாளன் என்பான், அக்குழந்தையை எடுத்துக்கொண்டு தன் மனைவியான பங்கயச் செல்வியிடம் கொடுத்தான். பிள்ளைப்பேறின்றி வருந்திக் கொண்டிருந்த அவள் பேரன்போடு இறைவன் தந்தருளிய குழந்தை இது எனத்தொழுது அக்குழந்தையை வளர்த்தாள்.

பின்னர் நீண்டகாலம் இவர் யோகத்தில் இருந்தார். பேயாழ்வாரைக் காணும் பேறு பெற்றார். அவரது அருள் பெற்று திருமால் பக்தரானார். சிவபிரான் இவரது பக்தியை மெச்சி, பக்திஸாரர் என்ற விருதை அளித்தார்.

இவர் சீடன் கணிகண்ணனுக்காக திருவெஃகா எம்பெருமான் ஆழ்வார் சொன்னவண்ணம் செய்தமையால், அப்பிரானுக்கு 'சொன்ன வண்ணம் செய்த பெருமாள்' என்ற சிறப்புப் பெயர் சூட்டினார். இவர் பாடியருளிய பாசுரங்கள் இருநூற்றுப் பதினாறு. அவை திருச்சந்த விருத்தம், நான்முகன் திருவந்தாதி என இரண்டு பிரபந்தங்களாய் திவ்ய ப்ரபந்தத்தில் இடம் பெற்றுள்ளன. அவற்றுள் பதினான்கு பாசுரங்கள் திருவேங்கடவனைப் பற்றிப் பேசுவன. இவை



திருவேங்கடத்து உறையும் செல்வனைப் பற்றியும், அவன் நிலை நின்று இருக்கும் திருமலையின் எழிலைப் பற்றியும் இயம்புவன.

## நம்மாழ்வார்



ஆழ்வார்கள் அனைவரையும் அவயவங்களாகக் கொண்டவராய், தான் அவயவியாய்ச் சிறப்பு பெற்றவர் நம்மாழ்வார். தமிழகத்தின் தென்பகுதியில் உள்ள திருநகரி என்னும் திருக்குருகூரில் வேளாள வருணத்தில் திருமாலுக்கே தொண்டு பூண்டு ஒழுகும் குலத்தில், காரியார் உடைய நங்கை ஆகியோர்க்குப் பிறந்தவர் நம்மாழ்வார். இவர் வைகாசித் திங்கள் விசாக நட்சத்திரத்தில் அவதரித்தார். இவரை சேனை முதலியார் எனப்பெறும் விஷ்வக்சேனரின் அம்சமாகக் கூறுவர். பொலிந்த நின்ற பிரான் (ஆதிநாதர்) திருக்கோயில் புளிய மரத்தடியில் குழந்தைப் பருவம் தொடங்கி பதினாறு வயது வரை வாய் திறவாமல் இருந்தார். அப்போது மதுரகவியாழ்வார் இவரைச் சந்தித்து வாய்த்திறக்கவைத்து இவரது சீடரானார். எம்பெருமானது ஐந்து நிலைகளான பரமபதத்தில் இருக்கும் இருப்பு, வியூஹ மூர்த்திகள், விபவ மூர்த்திகள், அந்தர்யாமி எம்பெருமான், அர்ச்சாவதார எம்பெருமான்கள் ஆகியோர் ஆழ்வாருடைய நெஞ்சென்னும் உட்கண்ணுக்குச் சேவை காட்டினர். இவற்றை அனுபவித்து, அவ்வநுபவத்தாலுண்டான பக்தி உள்ளடங்காமல் வழிந்து திருவிருத்தம், திருவாசிரியம், பெரிய திருவந்தாதி, திருவாய்மொழி என்னும் நான்கு ப்ரபந்தங்களாக வெளிப்பட்டது.

திருவிருத்தத்தில் எட்டு பாசுரங்களும், பெரிய திருவந்தாதியில் ஒரு பாசுரமும், திருவாய்மொழியில் முப்பத்தைந்து பாசுரங்களும் திருவேங்கடவனைப் பற்றி பேசினவையாகும். இவற்றில்,

திருவாய்மொழியிலுள்ள இரண்டு பதிகங்களில் நம்மாழ்வார்க்கு திருவேங்கடவனின் வாத்ஸல்ய (தாயன்பு) குணம் காட்டிக்கொடுத்தது அறியற்பாலதாகும். தனிப்பாசுரங்களாக அமைந்த பதின்மூன்று ஆழ்வாருக்கும் திருவேங்கடவனுக்குமுள்ள அழியாத் தொடர்பையும் அவன் கல்யாண குணங்களையும் போற்றி அமைகின்றன.

திருவிருத்தத்தில் அமைந்த எட்டுப் பாசுரங்களும் அகப்பொருள் துறையில் அமைந்து நாயகி-நாயக பாவனையைச் சொல்லுவதாகும். திருமாலைக் காதலிக்கும் பராங்குச நாயகியாகிய நம்மாழ்வாரின் பாரிப்பு இப்பாசுரங்களில் புலப்பட்டு நம்மையும் அவனுக்கு உரியவர்களாக உருவாக்கும் பாங்குடையன.

பெரிய திருவந்தாதியில் இடம்பெற்ற பாசுரம் ஆழ்வாரது உள்ளத்துறையும் திருவேங்கடவன் நிலையை உரைப்பதாகும்.

திருவாய்மொழியில் 'ஒழிவில் காலமெல்லாம்' என்ற பதிகத்தில், ஆழ்வாரே! நம்மோடு பரிமாறுவதற்கு இப்பிறப்பு தடையில்லை. உம்மை அடிமை கொள்வதற்காகவன்றோ திருவேங்கடமலையில் நிற்கிறேன். அங்கு வந்து அடிமை செய்து வாழலாமே என்று கூறித் திருவேங்கடவன் தன் நிலையைக் காட்ட, அவரது திருவடிகளில் எல்லா அடிமைகளையும் செய்ய வேண்டும் என்று பாரிக்கிறார் ஆழ்வார்.

'உலகமுண்டபெருவாயா' வில் பிராட்டியை முன்னிட்டுக் கொண்டு ஆழ்வார் திருவேங்கட வனைச் சரணம் அடைகிறார்.



## குலசேகராழ்வார்

குலசேகர ஆழ்வார் கொல்லிநகர் என்னும் திருவஞ்சிக்களத்தில் (கேரள நாடு) மாசித்திங்கள் புனர்வசு நட்சத்திரத்தன்று திருமாலின் கௌஸ்துப ரத்தினத்தின் அம்சமாய்

தோன்றினார். இவர் தந்தை கோழிக்கோட்டரசன் த்ரடவ்ரதன் ஆவர். தாய் சேர இளவரசி நாதநாயகி. இராமபிரானிடத்து பெரிதும் ஈடுபாடு கொண்டவர் இவர். திருமால் அடியார்களின் புனிதத்தன்மையைப் பாம்பிட்ட குடத்தில் கையிட்டு நிலைநிறுத்தினார். இவர் ஆங்காங்கு திவ்ய தேசத்து எம்பெருமான்களை அநுபவிக்கும் போது, அவ்வநுபவத்தால் உண்டான ஆனந்தம் உள்ளடங்காமல் அனைவரும் அநுபவித்து உய்யலாம்படி வெளியிட்ட ப்ரபந்தம் பெருமாள் திருமொழியாகும். முகுந்தமாலை என்னும் பெயருடன் வடமொழியில் அமைந்துள்ள அற்புதமான ஒரு துதிநூல் இவர் இயற்றியதாகச் சொல்லப்படுகிறது. பெருமாள் திருமொழி நூற்றைந்து பாசுரங்களைக்கொண்டு பத்துத் திருமொழிகளாக அமைந்துள்ளது. அவற்றுள் ஊனேறு செல்வத்து எனத்தொடங்கும் நான்காம் திருமொழியில் பதினொரு பாசுரங்களும் திருவேங்கடவனைப் பற்றியன. கலியுக வரதன் ஏழுமலையப்பன் வாசம் செய்யும் திருமலை சம்பந்தமே இந்த உடல் பிறவிப் பிணிக்கு மருந்து என உணர்த்துவன அவை. எனவே ஏதேனும் ஒரு சம்பந்தம் தனக்குத் திருமலையோடு ஏற்படுத்தித் தருமாறு திருவேங்கடவனை வேண்டுகிறார் ஆழ்வார் இத்திருமொழியில்.



## பெரியாழ்வார்

தமிழகத்தின் தென்பால் ஸ்ரீவில்லிபுத்தூர் என்னும் வைணவத்தலம் உள்ளது. அங்கு வேயர் குலத்தவராகிய முகுந்தப்பட்டர் பதுமவல்லி என்பார்க்கு ஆனித்திங்கள் சுவாதியில் அவதரித்தவரே பெரியாழ்வாராவர். இவரைக் கருடனின் அம்சமாகக் கூறுவர். இவர்தம் இயற்பெயர் விஷ்ணுசித்தர் என்பதாகும். நாராயண

னுக்கே பல்லாண்டு பாடியவராதலின் ஆழ்வார்களுள் இவர் பெரியாழ்வார் என்ற பெயர் பெற்றார். மதுரையில் பாண்டியன் அவையில் சமயவாதிகளை வென்று எல்லாம் தோன்றவும் எல்லாம் நிறைவுறவும், எல்லாம் ஒன்றவும் காரணமான பரம்பொருள் நாராயணனே என்று நிலைநாட்டினார். ஆண்டாளின் வளர்ப்புத் தந்தையுமிவரே. ஸ்ரீவில்லிபுத்தூர் வடபத்திரசாயிக்குப் பூமாலை தொடுத்துக் கொடுப்பதைத் தம் பணியாகக் கொண்டவர். இவர் பாடியன 473 பாசுரங்கள். அவை பெரியாழ்வார் திருமொழி எனப்படும். மங்களாசாசனமாக அமைந்த திருப்பல்லாண்டும் பெரியாழ்வார் திருமொழியில் இடம் பெற்றுள்ளது. அவற்றுள் ஏழு பாசுரங்கள் திருவேங்கடவனுக்கு உரியன. இவ்வேழு பாசுரங்களும் திருவேங்கடவனை இராமனாகவும் கண்ணனாகவும் கருதிப் பாடினவையாகும்.



## திருப்பாணாழ்வார்

திருவரங்கத்துக்கு அருகிலுள்ள காவிரித் தென்கரையில் அமைந்துள்ள உறையூரில் கார்த்திகை மாதம் ரோகிணியில் குழந்தையில்லாத பாணர் ஒருவர்க்கு நெல்வயலில் கிடைக்கப்பெற்றவர் திருப்பாணாழ்வார். பாணர் குலத்தில் வளர்ந்தமையால் திருப்பாணாழ்வார் என்று அழைக்கப்பட்டார். திருமாலின் ஸ்ரீவத்ஸம் என்னும் மறுவின் அம்சமாக இவரைக் குறிப்பிடுவர். தாம் தாழ்ந்த குலத்தில் வளர்ந்தமையை எண்ணிக் காவிரிக்கரையில் நின்றவாறு திருவரங்கத்தை நோக்கி, யாழ் மீட்டி அரங்கனைப் பாடியதால் அவனருளுக்கு இலக்கானார். அரங்கன் கனவில்

கட்டளையிட்டபடியே லோகாசாரங்க முனிவர் பாண் பெருமாளைத் தன் தோளின் மேலே ஏற்றிக்கொண்டு அரங்கன் முன்னே நிறுத்த, ஆழ்வாரும் அரங்கன் திருமேனியை திருவடி முதல் திருமுடி வரை அநுபவித்துச் சேவித்து அமலனாதி பிரான் என்ற ப்ரபந்தத்தை அருளினார். அதில் இரண்டு பாசுரங்களில் திருவேங்கடவனைப் பற்றி கூறியுள்ளார். திருவேங்கடவனே தெற்கு வாசல் வழியாக வந்து அரவணைத்துயின்று அரங்கனாயினான் என்றும், வானவர்கள் சந்தி செய்ய நின்றவன் என்றும் போற்றியுரைப்பர்.



## திருமங்கையாழ்வார்

திருமங்கையாழ்வார் திருவாலி திருநகரி என்னும் திவ்யதேசத்திற்கு அருகிலுள்ள திருக்குறையலூரில் திருமாலின் சாரங்கம் என்னும் விஷ்ணுதனுசின் அம்சமாய் அவதரித்தவர். இவர் பிறக்கும் போதே நீலமேக வண்ணனான கண்ணன் போலே கருமை நிறமுடையராய் இருந்ததால் இவரது தந்தை இவருக்கு 'நீலன்' என்ற பெயர் இட்டார். சோழ மன்னருக்கு உதவி புரிந்து திருமங்கை நாட்டிற்கு மன்னராய் வாழ்ந்து வந்த நாளில் குமுதவல்லி என்னும் தேவலோக நங்கையிடம் காதல் கொண்டார். அவள் விருப்பத்திற்கு ஏற்ப ஒரு வருட காலம் தினந்தோறும் ஆயிரம் ஸ்ரீ வைஷ்ணவர்க்கு அமுது செய்வித்து அவர்களுடைய ஸ்ரீபாத தீர்த்தத்தையும் ப்ரசாதத்தையும் ஏற்று வாழ்ந்து வரலானார். இவ்வாறு நிகழ்ந்து வரும் நாளில் திருமங்கைமன்னன் வறுமையுற்றார். எனினும் சொன்னசொல் தவறக்கூடாமையால், வழிப்பறி செய்து தன்

நோன்பைக் காத்து வரலானார். இவர்க்கு அருளத் திருவுள்ளம் கொண்ட எம்பெருமான் மணவாளனாகப் பிராட்டியுடன் வழியில் வர, அவர்களை ஆழ்வார் வளைத்து ஆபரணங்கள் அனைத்தையும் கவர்ந்த கொண்டு, மணவாளன் காலில் அணிந்த கணையாழியை பற்களாலே கடித்தும் வாங்க முடியாமல் போகவும், பறித்த பொருள்கள் எடுக்கமாட்டாமல் கனக்கவும், நீலன், என்ன மந்திரம் செய்தாய் என்று கேட்க அம்மந்திரத்தை ஆழ்வார்க்கு உபதேசம் செய்வதாக அவரை அருகில் அழைத்து திருச்செவியில் வேதமனைத்துக்கும் சாரமாய், பிறவிப்பிணி அறுத்துப் பரமபதம் அளிப்பதாய், மந்திரங்களுக்கு அரசனான எட்டு எழுத்து மந்திரத்தை ஓதினார். அதாவது ஓம் நமோ நாராயணாய என்பதாகும். அன்று முதல் ஆழ்வார் நாராயண மந்திரத்தையும், அதன் பெருமையையும், திருமாலின் திருக்குணங்களையும் பாடிப்பரவி வரலானார். இவர் அருளிய 1137 பாசுரங்களும் ஆறு ப்ரபந்தங்களாகத் திவ்யப்ரபந்தத்தில் இடம் பெற்றுள்ளன. அவை பெரிய திருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவெழுக் கூற்றிருக்கை, சிறிய திருமடல், பெரிய திருமடல் என்பன. இந்த ஆறு ப்ரபந்தங்களும் வேதத்தில் ஆறு அங்கங்கட்கு ஒக்கும் எனக் கருதுகின்றனர். பெரிய திருமொழியில் 50 பாசுரங்களும், திருக்குறுந்தாண்டகத்தில் ஒரு பாசுரமும், திருநெடுந்தாண்டகத்தில் மூன்று பாசுரங்களும், திருமடல்களில் ஒவ்வொரு அடியும் திருவேங்கடவனைப் பற்றியன.

கொங்கலர்ந்த மலர்க்குருந்தம் என்று தொடங்கும் முதற்பத்து எட்டாம் திருமொழியில் திருமலையில் இயற்கை எழிலைக் காட்டி அங்கு உறையும் திருவேங்கடவனின் தன்னிகரில்லாத் தன்மைகளையும் சுட்டி, அப்படிப்பட்ட மலையை அடைந்து உய்யுமாறு நெஞ்சுக்கு அறிவுறுத்துகிறார் ஆழ்வார்.

இவ்வாறு திருமலையையும் அங்கு வாழும் எம்பெருமானைப் பற்றியும் இயம்புவன மற்ற மூன்று பதிகங்களும். இவை பெரும்பாலும் நெஞ்சோடு கிளத்தலாக உள. இன்னும் 15 பாசுரங்கள் பெரிய திருமொழியில் உள. இவை ஆத்மாவை விரோதிகளிலிருந்து

காத்துத் திருமாலின் திருவடிப்பேற்றை தந்தருளும் பொருண்மையின.

## ஆண்டாள்



ஸ்ரீவில்லிபுத்தூரில் பெரியாழ்வார் அமைத்த திருத்துழாய்த் திருநந்தவனத்தில் அவருக்கு மகளாக ஆடித்திங்கள் பூர திருநட்சத்திரத்தில் தோன்றியவள் ஆண்டாள். இவளைப் பூதேவியின் அம்சமாகக் கூறுவர். பெரியாழ்வார் புனைந்த மாலையைத் தான் சூடி அழகு பார்த்துப் பின் வடபத்திரசாயிக்கு அளித்து மகிழ்ந்தமையால் இவள் சூடிக்கொடுத்த நாச்சியார் என்னும் பெயர் பெற்றாள். மானிடவர்க்கு என்று பேச்சுப்படில் வாழகில்லேன் என்று திருமாலுக்கே தன்னை அர்ப்பணித்துக்கொண்ட ஞானப்பூங்கோதை இவள். இவள் காதலன்பில் பாடிய பாசுரங்கள் பள்ளமடைபோல் பாய்ந்து பக்திப் பயிர் வளர்ப்பன. இவள் இயற்றியது திருப்பாவையும் நாச்சியார் திருமொழியுமாகும். நாச்சியார் திருமொழியில் பதினாறு பாசுரங்கள் திருவேங்கடவனைப் பற்றியதாகும். அவற்றுள் விண்ணீல மேலாப்பு என்னும் பதிகம் மேகவிடுதூதாக அமைந்துள்ளது. தன்னைக் கலந்து பிரிந்தபோது எம்பெருமான் கார்காலத்தில் வருவதாகச் சொல்லிச் சென்றான். கார்காலமும் வந்தது. மேகங்கள் சூழ்ந்திருக்கக் கண்டு எம்பெருமான் வரவில்லையே என்று ஏங்கித் தன் துயரத்தை மேகங்களைப் பார்த்துச் சொல்லி அங்குச் சென்று தூதுமொழியாக உரைக்க வேண்டுகிறாள் இப்பதிகத்தில். சூடிக்கொடுத்த சுடர்க்கொடி, விஷ்ணுசித்தர் வாழ்வை, 'ஆமுக்தமால்யதா' என்னும் காவியமாக மன்னர் கிருஷ்ணதேவராயர் இயற்றியுள்ளது அறியற்பாலதாகும்.

❄ ❄ ❄

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம :

ஆழ்வார் திருவடிகளே சரணம்.

## காப்பு

பல்லாண்டு பல்லாண்டு பல்லாயிரத் தாண்டு
பலகோடி நூறாயிரம்
மல்லாண்ட திண்தோள் மணிவண்ணா! உன்
செவ்வடி செவ்வித்திருக் காப்பு

ஸ்ரீ

## தனிப்பாசுரங்கள்

### *பொய்கையாழ்வார் அருளிச்செய்த முதல் திருவந்தாதி*

எழுவார் விடைகொள்வார் ஈன்துழா யானை
வழுவா வகைநினைந்து வைகல்-தொழுவார்
வினைச்சுடரை நந்துவிக்கும் வேங்கடமே வானோர்
மனச்சுடரைத் தூண்டும் மலை • 26

வகையறு நுண்கேள்வி வாய்வார்கள் நாளும்
புகைவிளக்கும் பூம்புனலும் ஏந்தித் -திசைதிசையின்
வேதியர்கள் சென்றிறைஞ்சும் வேங்கடமே வெண்சங்கம்
ஊதியவாய் மாலுகந்த வூர். 37

ஊரும் வரியரவம் ஒண்குறவர் மால்யானை
பேர வெறிந்த பெருமணியைக்-காருடைய
மின்னென்று புற்றடையும் வேங்கடமே மேலசுரர்
எம்மென்னு மால திடம். 38

இடந்தது பூமி எடுத்தது குன்றம்
கடந்தது கஞ்சனைமுன் னஞ்சக்-கிடந்த துவும்
நீரோத மாகடலே நின்றதுவும் வேங்கடமே
பேரோத வண்ணர் பெரிது. 39

பெருவில் பகழிக் குறவர்கைச் செந்தீ
வெருவிப் புனம்துறந்த வேழம்-இருவிசும்பில்
மீன்வீழக் கண்டுஅஞ்சும் வேங்கடமே மேலசுரர்
கோன்வீழக் கண்டுகந்தான் குன்று. 40

உணர்வாரார் உன்பெருமை? ஊழிதோ றூழி
உணர்வாரார் உன்னுருவந் தன்னை? - உணர்வாரார்?
விண்ணகத்தாய்! மண்ணகத்தாய்! வேங்கடத்தாய்! நால்வேதப்
பண்ணகத்தாய்! நீகிடந்த பால். 68

வழிநின்று நின்னைத் தொழுவார் வழுவா
மொழிநின்ற மூர்த்தியரே யாவர்-பழுதொன்றும்
வாராத வண்ணமே விண்கொடுக்கும் மண்ணளந்த
சீரான் திருவேங்கடம். 76

வேங்கடமும் விண்ணகரும் வெஃகாவும் அஃகாத
பூங்கிடங்கின் நீள் கோவல் பொன்னகரும்-நான் கிடத்தும்
நின்றான் இருந்தான் கிடந்தான் நடந்தானே
என்றால் கெடுமாம் இடர். 77

படையாரும் வாட்கண்ணார் பாரசிநாள் பைம்பூந்
தொடையலோடு ஏந்திய தூபம்-இடையிடையில்
மீன்மாய மாசூணும வேங்கடமே மேலொருநாள்
மான்மாய வெய்தான் வரை. 82

உளன்கண்டாய் நன்னெஞ்சே! உத்தம னென்றும்
உளன்கண்டாய் உள்ளுவா ருள்ளத்து-உளன்கண்டாய்
வெள்ளத்தி னுள்ளானும் வேங்கடத்து மேயானும்
உள்ளத்தி னுள்ளானென்று ஓர். 99

*பொய்கையாழ்வார் திருவடிகளே சரணம்.*

# பூதத்தாழ்வார் அருளிச்செய்த இரண்டாந் திருவந்தாதி

சென்றது இலங்கைமேல் செவ்வேதன் சீற்றத்தால்
கொன்றது இராவணனைக் கூறுங்கால்-நின்றதுவும்
வேயோங்கு தண்சாரல் வேங்கடமே விண்ணவர்தம்
வாயோங்கு தொல்புகழான் வந்து. 25

மனத்துள்ளான் வேங்கடத்தான் மாகடலான் மற்றும்
நினைப்பரிய நீளரங்கத் துள்ளான் - எனைப்பலரும்
தேவாதி தேவ னெனப்படுவான் முன்னொருநாள்
மாவாய் பிளந்த மகன். 28

துணிந்தது சிந்தை துழாயலங்கல் அங்கம்
அணிந்தவன்பேர் உள்ளத்துப் பல்கால்-பணிந்ததுவும்
வேய்பிறங்கு சாரல் விறல்வேங் கடவனையே
வாய்திறங்கள் சொல்லும் வகை. 33

உளதென் றிறுமாவார் உண்டில்லை யென்று
தளர்த லதனருகுஞ் சாரார்-அளவரிய
வேதத்தான் வேங்கடத்தான் விண்ணோர் முடிதோயும்
பாதத்தான் பாதம் பயின்று. 45

பயின்றது அரங்கம் திருக்கோட்டி பன்னாள்
பயின்றதுவும் வேங்கடமே பன்னாள்-பயின்றது
அணிதிகழும் சோலை அணிநீர் மலையே
மணிதிகழும் வண்தடக்கை மால். 46

நெறியாற் குழற்கற்றை முன்னின்று பின்தாழ்ந்து
அறியா திளங்கிரியென்றெண்ணிப் - பிரியாது
பூங்கொடிகள் வைகும் பொருபுனற் குன்றென்னும்
வேங்கடமே யாம்விரும்பும் வெற்பு. 53

வெற்பென் றிருஞ்சோலை வேங்கடமென் றிவ்விரண்டும்
நிற்பென்று நீமதிக்கும் நீர்மைபோல்-நிற்பென்று
உளங்கோயில் உள்ளம்வைத் துள்ளினேன் வெள்ளத்
திளங்கோயில் கைவிடே லென்று. 54

போதறிந்து வானரங்கள் பூஞ்சுனைபுக்கு ஆங்கலர்ந்த
போதரித்து கொண்டேத்தும் போதுஉள்ளம்-போது
மணிவேங் கடவன் மலரடிக்கே செல்ல
அணிவேங் கடவன்பேராய்ந்து. 72

பெருகு மதவேழம் மாப்பிடிக்கு முன்னின்று
இருக ணிளமூங்கில் வாங்கி-அருகிருந்த
தேன்கலந்து நீட்டும் திருவேங் கடம்கண்டீர்
வான்கலந்த வண்ணன் வரை. 75

*பூதத்தாழ்வார் திருவடிகளே சரணம்.*

ஸ்ரீ

## பேயாழ்வார் அருளிச்செய்த மூன்றாம் திருவந்தாதி

மாற்பால் மனஞ்சுழிப்ப மங்கையர்தோள் கைவிட்டு
நூற்பால் மனம்வைக்க நொய்விதாம்-நாற்பால
வேதத்தான் வேங்கடத்தான் விண்ணோர் முடிதோயும்
பாதத்தான் பாதம் பணிந்து. 14

சிறந்தஎன் சிந்தையும் செங்கணரவும்
நிறைந்தசீர் நீள்கச்சி யுள்ளும்-உறைந்ததும்
வேங்கடமும் வெஃகாவும் வேளுக்கைப் பாடியுமே
தாம்கடவார் தண்டுழா யார். 26

சேர்ந்த திருமால் கடல்குடந்தை வேங்கடம்
நேர்ந்த என் சிந்தை நிறைவிசும்பு-வாய்ந்த
மறைபா டகம்அனந்தன் வண்துழாய்க் கண்ணி
இறையாடி யாய இவை. 30

பாற்கடலும் வேங்கடமும் பாம்பும் பனிவிசும்பும்
நூற்கடலும் நுண்ணூல தாமரைமேல்-பாற்பட்
டிருந்தார்மனமும் இடமாகக் கொண்டான்
குருந்தொசித்த கோபால கன். 32

இறையாய் நிலனாகி எத்திசையும் தானாய்
மறையாய் மறைபொருளாய் வானாய்ப்-பிறைவாய்ந்த
வெள்ளத்தருவி விளங்கொலிநீர் வேங்கடத்தான்
உள்ளத்தினுள்ளே உளன். 39

உளன்கண்டாய் நல்நெஞ்சே! உத்தமனென்றும்
உளன்கண்டாய் உள்ளுவாருள்ளத்து -உளன்கண்டாய்
விண்ணொடுங்கக் கோடுயரும் வீங்கருவி வேங்கடத்தான்
மண்ணொடுங்கத் தானளந்த மன். 40

புரிந்து மதவேழம் மாப்பிடியோடு ஊடித்
திரிந்து சினத்தால் பொருது-விரிந்தசீர்
வெண்கோட்டு முத்துதிர்க்கும் வேங்கடமே மேலொருநாள்
மண்கோட்டுக் கொண்டான் மலை. 45

தெளிந்த சிலாதலத்தின் மேலிருந்த மந்தி
அளிந்த கடுவனையே நோக்கி-விளங்கிய
வெண்மதியம் தாவென்னும் வேங்கடமே மேலொருநாள்
மண்மதியில் கொண்டுகந்தான் வாழ்வு. 58

பண்டெல்லாம் வேங்கடம் பாற்கடல் வைகுந்தம்
கொண்டங் குறைவார்க்குக் கோயில்போல் - வண்டு
வளங்கிளரும் நீள்சோலை வண்பூங் கடிகை
இளங்குமரன் தன்விண் ணகர். 61

விண்ணகரம் வெஃகா விரிதிரைநீர் வேங்கடம்
மண்ணகரம் மாமாட வேளுக்கை - மண்ணகத்த
தென்குடந்தை தேனார் திருவரங்கம் தென்கோட்டி
தன்குடங்கை நீரேற்றான் தாழ்வு. 62

தாழ்சடையும் நீள்முடியும் ஒள்மழுவும் சக்கரமும்
சூழரவும் பொன்னாணும் தோன்றுமால் - சூழும்
திரண்டருவி பாயும் திருமலைமே லெந்தைக்கு
இரண்டுருவு மொன்றாய்இசைந்து 63

பார்த்த கடுவன் சுனைநீர் நிழற்கண்டு
பேர்த்தோர் கடுவ னெனப்பேர்ந்து - கார்த்த
களங்கனிக்குத் கைநீட்டும் வேங்கடமே மேனாள்
விளங்கனிக்குக் கன்றெறிந்தான் வெற்பு. 68

வெற்பென்று வேங்கடம் பாடும் வியன்துழாய்
கற்பென்றுசூடும் கருங்குழல்மேல்- மற்போன்ற
நீண்டதோள் மால்கிடந்த நீள்கடல்நீ ராடுவான்
பூண்டநா ளெல்லாம் புகும். 69

புகுமதத்தால் வாய்பூசிக் கீழ்தாழ்ந்து அருவி
உகுமதத்தால் கால்கழுவிக்கையால - மிகுமதத்தேன்
விண்டமலர் கொண்டு விறல்வேங் கடவனையே
கண்டு வணங்கும் களிறு. 70

களிறு முகில்குத்தக் கையெடுத் தோடி
ஒளிறு மருப்பொசிகை யாளி- பிளிறி
விழக்கொன்று நின்றதிரும் வேங்கடமே மேனாள்
குழக்கன்று கொண்டெறிந்தான் குன்று. 71

குன்றென்றி னாய குறமகளிர் கோல்வளைக்கை
சென்று விளையாடும் தீங்கழைபோய்-வென்று
விளங்குமதி கோள்விடுக்கும் வேங்கடமே மேலை
இளங்குமரர் கோமா னிடம். 72

இடம்வலமேழ் பூண்ட இரவித்தே ரோட்டி
வடமுக வேங்கடத்து மன்னும் - குடம்நயந்த
கூத்தனாய் நின்றான் குரைகழலே கூறுவதே
நாத்தன்னா லுள்ள நலம். 73

சார்ந்தகடு தேய்ப்பத் தடாவியகோட் டுச்சிவாய்
ஊர்ந்தியங்கும் வெண்மதியி னொண் முயலைச் - சேர்ந்து
சினவேங்கை பார்க்கும் திருமலையே ஆயன்
புனவேங்கை நாறும் பொருப்பு. 75

முடிந்த பொழுதில் குறவாணர் ஏனம்
படிந்துழுசால் பைந்தினைகள் வித்தத் - தடிந்தெழுந்த
வேய்ங்கழைபோய் விண்திறக்கும் வேங்கடமே மேலொருநாள்
தீங்குழல்வாய் வைத்தான் சிலம்பு. 89

*பேயாழ்வார் திருவடிகளே சரணம்.*

ஸ்ரீ

## திருமழிசைப்பிரான் அருளிச் செய்தவை
## நான்முகன் திருவந்தாதி

குறிப்பு எனக்குக் கோட்டியூர் மேயானை யேத்தக்
குறிப்புஎனக்கு நன்மை பயக்க-வெறுப்பனோ?
வேங்கடத்து மேயானை மெய்வினை நோய் எய்தாமல்
தான்கடத்தும் தன்மையான் தாள். 34

அழைப்பன் திருவேங் கடத்தானைக் காண
இழைப்பன் திருக்கூடல் கூட - மழைப்பே
ரருவி மணிவரன்றி வந்திழிய யானை
வெருவி யரவொடுங்கும் வெற்பு. 39

வெற்பென்று வேங்கடம் பாடினேன் வீடாக்கி
நிற்கின்றேன் நின்று நினைக்கின்றேன் - கற்கின்ற
நூல்வலையில் பட்டிருந்த நூலாட்டி கேள்வனார்
கால்வலையில் பட்டிருந்தேன் காண். 40

காண லுறுகின்றேன் கல்லருவி முத்துதிர
ஓண விழவி லொலியதிரப் - பேணி
வருவேங் கடவா: என்னுள்ளம் புகுந்தாய்
திருவேங் கடமதனைச் சென்று. 41



6

சென்று வணங்குமினோ சேணுயர் வேங்கடத்தை
நின்று வினைகெடுக்கும் நீர்மையால் - என்றும்
கடிக்கமல நான்முகனும் கண்மூன்றத் தானும்
அடிக்கமல மிட்டேத்தும் அங்கு. 42

மங்குல்தோய் சென்னி வடவேங் கடத்தானைக்
கங்குல் புகுந்தார்கள் காப்பணிவான் - திங்கள்
சடையேற வைத்தானும் தாமரைமே லானும்
குடையேறத் தாங்குவித்துக் கொண்டு. 43

கொண்டு குடங்கால்மேல் வைத்த குழவியாய்த்
தண்ட வரக்கன் தலைதாளால் - பண்டெண்ணிப்
போமகுமரன் நிற்கும் பொழில்வேங் கடமலைக்கே
போம்குமர ருள்ளீர்! புரிந்து. 44

புரிந்து மலரிட்டுப் புண்டரீகப் பாதம்
பரிந்து படுகாடு நிற்பத் - தெரிந்தெங்கும்
தானோங்கி நிற்கின்றான் தண்ணருவி வேங்கடமே
வானோர்க்கும் மண்ணோர்க்கும் வைப்பு. 45

வைப்பன் மணிவிளக்கா மாமதியை மாலுக்கென்று
எப்பொழுதும் கைநீட்டும் யானையை - எபபாடும்
வேடுவளைக் கக்குறவர் வில்லெடுக்கும் வேங்கடமே
நாடுவளைத் தாடுதுமேல் நன்று. 46

நன்மணி வண்ணனூர் ஆளியும் கோளரியும்
பொன்மணியும் முத்தமும் பூமரமும் - பன்மணிநீ
ரோடு பொருதுருளும் கானமும் வானரமும்
வேடு முடைவேங் கடம். 47

வேங்கடமே விண்ணோர் தொழுவதுவும் மெய்ம்மையால்
வேங்கடமே மெய்வினைநோய் தீர்ப்பதுவும் - வேங்கடமே
தானவரை வீழத்தன் னாழிப் படைதொட்டு
வானவரைக் காப்பான் மலை. 48

வீற்றிருந்து விண்ணாள வேண்டுவார் வேங்கடத்தான்
பால்திருந்த வைத்தாரே பல்மலர்கள் - மேல்திருந்த
வாழ்வார் வருமதிபார்த்து அன்பினராய் மற்றவர்க்கே
தாழ்வா யிருப்பார் தமர். 90

## திருச்சந்த விருத்தம்

செழுங்கொழும் பெரும்பனி பொழிந்திட உயர்ந்தவேய்
விழுந்துலர்ந்தெழுந்து விண்புடைக்கும்வேங்கடத்துள் நின்று
எழுந்திருந்துதேன்பொருந்து பூம்பொழில்தழைக்கொழுஞ்
செழுந்தடங்குடந்தையுள் கிடந்தமா லுமல்லையே? 60

கடைந்துபாற்கடல்கிடந்து காலநேமியைக் கடிந்து
உடைந்தவாலிதன்தனக்கு உதவவந்து இராமனாய்
மிடைந்தஏழ்மரங்களும் அடங்கவெய்து வேங்கடம்
அடைந்தமாலபாதமேஅடைந்துநாளும் உய்ம்மினோ. 81

*திருமழிசைப்பிரான் திருவடிகளே சரணம்.*

## நம்மாழ்வார் அருளிச்செய்த திருவாய்மொழி
## 3-ம் பத்து 3-ம் திருவாய்மொழி

ஒழிவில் காலமெல்லாம் உடனாய்மன்னி
வழுவிலா அடிமைசெய்யவேண்டும்நாம்
தெழிகுரலருவித் திருவேங்கடத்து
எழில்கொள்சோதி எந்தைதந்தைதந்தைக்கே. 1

எந்தை தந்தைதந்தை தந்தைதந்தைக்கும்
முந்தை வானவர் வானவர்கோனொடும்
சிந்துபூமகிழும் திருவேங்கடத்து
அந்தமில்புகழ்க் காரெழிலண்ணலே 2

அண்ணல்மாயன் அணிகொள் செந்தாமரைக்
கண்ணன் செங்கனிவாய்க் கருமாணிக்கம்
தெண்ணிறைச்சுனைநீர்த் திருவேங்கடத்து
எண்ணில்தொல்புகழ் வானவரீசனே. 3

ஈசன்வானவர்க்கென்பன் என்றால் அது
தேசமோ திருவேங்கடத்தானுக்கு?
நீசனேன் நிறைவொன்றுமிலேன் என்கண்
பாசம்வைத்த பரஞ்சுடர்ச்சோதிக்கே. 4

சோதியாகி எல்லாவுலகும்தொழும்
ஆதிமூர்த்தியென்றால் அளவாகுமோ?
வேதியர் முழுவேதத்தமுதத்தைத்
தீதில்சீர்த் திருவேங்கடத்தானையே. 5

வேங்கடங்கள் மெய்ம்மேல்வினைமுற்றவும்
தாங்கள்தங்கட்கு நல்லனவேசெய்வார்
வேங்கடத்துறைவார்க்கு நமவென்னல்
ஆம்கடமை அதுசுமந்தார்கட்கே. 6

சுமந்துமாமலர் நீர்சுடர்தூபம் கொண்டு
அமர்ந் துவானவர் வானவர்கோ னொடும்
நமன்றெழும் திருவேங்கடம்நங்கட்கு
சமன்கொள்வீடுதரும் தடங்குன்றமே. 7

குன்றமேந்திக் குளிர்மழைகாத்தவன்
அன்றுஞாலம் அளந்தபிரான் பரன்
சென்றுசேர் திருவேங்கடமாமலை
ஒன்றுமேதொழ நம்வினைஓயுமே. 8

ஓயும்மூப்புப் பிறப்புஇறப்புப்பிணி
வீயுமாறுசெய்வான் திருவேங்கடத்து
ஆயன் நாள்மலராம் அடித்தாமரை
வாயுள்ளும்மனத்துள்ளும் வைப்பார்கட்கே. 9

வைத்தநாள்வரை எல்லைகுறுகிச்சென்று
எய்த்திளைப்பதன்முன்னம் அடைமினோ
பைத்தபாம்பணையான் திருவேங்கடம்
மொய்த்தசோலை மொய்பூந்தடம்தாழ்வரே. 10

தாள்பரப்பி மண்தாவிய ஈசனை
நீள்பொழில் குருகூர்ச்சட கோபன்சொல்
கேழிலாயிரத்து இப்பத்தும் வல்லவர்
வாழ்வர் வாழ்வெய்தி ஞாலம்புகழவே. 11

*ஆழ்வார் திருவடிகளே சரணம்.*

## 6–ம் பத்து 10–ம் திருவாய்மொழி

உலக முண்ட பெருவாயா! உலப்பில் கீர்த்தி யம்மானே!
நிலவும் சுடர்சூ ழொளிமூர்த்தி! நெடியாய்! அடியேன் ஆருயிரே!
திலத முலகுக் காய்நின்ற திருவேங் கடத்துஎம் பெருமானே!
குலதொல் லடியேன் உன்பாதம் கூடு மாறு கூறாயே. 1

கூறாய் நீறாய் நிலனாகிக் கொடுவல் லசுரர் குலமெல்லாம்
சீறா எறியும் திருநேமி வலவா! தெய்வக் கோமானே!
சேறார் சுனைத்தா மரைசெந்தீ மலரும் திருவேங் கடத்தானே!
ஆறா வன்பி லடியேன்உன் னடிசேர் வண்ணம் அருளாயே. 2

வண்ண மருள்கொ ளணிமேக வண்ணா! மாய வம்மானே!
எண்ணம் புகுந்து தித்திக்கும் அமுதே! இமையோ ரதிபதியே!
தெண்ண லருவி மணிப்பொன்முத் தலைக்கும் திருவேங் கடத்தானே!
அண்ணலே உன் னடிசேர அடியேற்கு ஆவா வென்னாயே. 3

ஆவா! என்னாது உலகத்தை யலைக்கும் அசுரர் வாணாள்மேல்
தீவாய் வாளி மழைபொழிந்த சிலையா! திருமாமகள் கேள்வா!
தேவா சுரர்கள் முனிக்கணங்கள் விரும்பும் திருவேங் கடத்தானே!
பூவார் கழல்கள் அருவினையேன் பொருந்து மாறு புணராயே. 4

புணரா நின்ற மரமேழ் அன்றெய்த ஒருவில் வலவாவோ!
புணரேய் நின்ற மரமிரண்டின் நடுவே போன முதல்வாவோ!
திணரார் மேக மெனக்களிறு சேரும் திருவேங்கடத்தானே!
திணரார் சார்ங்கத்து உனபாதம் சேர்வ தடியே னெந்நாளே? 5

எந்நாளே? நாம் மண்ணளந்த இணைத்தாமரை கள்காண்பதற்கென்று
எந்நாளும் நின்று இமையோர்க ளேத்தி இறைஞ்சி இனமினமாய்
மெய்ந்நா மனத்தால் வழிபாடு செய்யும் திருவேங் கடத்தானே!
மெய்ந்தா னெய்தி எந்நாள் உன்னடிக்கண் அடியேன் மேவுவதே? 6

அடியேன் மேவி யமர்கின்ற அமுதே! இமையோ ரதிபதியே!
கொடியா வடுபுள் ளுடையானே! கோலக் கனிவாய்ப் பெருமானே!
செடியார் வினைகள் தீர்மருந்தே! திருவேங் கடத்தெம் பெருமானே!
நொடியார் பொழுதும் உனபாதம் காண நோலா தாற்றேனே. 7

நோலா தாற்றேன் உனபாதம் காண வென்று நுண்ணுணர்வின்
நீலார் கண்டத் தம்மானும் நிறைநான் முகனும் இந்திரனும்
சேலேய் கண்ணார் பலர்சூழ விரும்பும் திருவேங் கடத்தானே
மாலாய் மயக்கி அடியேன்பால் வந்தாய் போலே வாராயே. 8

வந்தாய் போலே வாராதாய் வாராதாய் போல் வருவானே
செந்தா மரைக்கண் செங்கனிவாய் நால்தோ ளமுதே எனதுயிரே!
சிந்தா மணிகள் பகரல்லைப் பகல்செய் திருவேங் கடத்தானே!
அந்தோ! அடியேன் உனபாதம் அகல கில்லேன் இறையுமே. 9

அகல கில்லேன் இறையுமென்று அலர்மேல் மங்கையுறை மார்பா!
நிகரில் புகழாய் உலகம் மூன்றுடையாய்! என்னையாள் வானே!
நிகரி லமரர் முனிக்கணங்கள் விரும்பும் திருவேங் கடத்தானே!
புகலொன் றில்லா அடியேன் உன்னடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே 10

அடிக்கீ ழமர்ந்துபுகுந்து அடியீர்! வாழ்மி னென்றென் றருள் கொடுக்கும்
படிக்கே ழில்லாப் பெருமானைப் பழனக் குருகூர்ச் சடகோபன்
முடிப்பான் சொன்ன ஆயிரத்துத் திருவேங் கடத்துக் கிவைபத்தும்
பிடித்தார் பிடித்தார் வீற்றிருந்து பெரிய வானுள் நிலாவுவரே. 11

*ஆழ்வார் திருவடிகளே சரணம்.*

❊ ❊ ❊

# திருவாய்மொழி

கண்ணாவான் என்றும்
மண்ணோர் விண்ணோர்க்கு
தண்ணார் வேங்கட
விண்ணோர் வெற்பனே. 1 ப. 8 தி. 3

எந்தாய் தண்திருவேங்கடத்துள்நின்றாய்! இலங்கைசெற்றாய் மராமரம்
பைந்தா ளேழுருவ ஒருவாளி கோத்த வில்லா!
கொந்தார் தண்ணந்துழாயினாய்! அமுதே!
உன்னைஎன் னுள்ளேகுழைத்தஎம்
மைந்தா வானேறே! இனிஎங்குப் போகின்றதே? 2 ப. 6 தி. 9

போகின்றகாலங்கள் போயகாலங்கள் போகுகாலங்கள் தாய்தந்தையுயி
ராகின்றாய் உன்னைநான் அடைந்தேன்விடுவேனோ?
பாகின்ற தொல்புகழ் மூவுலகுக்கும் நாதனே! பரமா! தண்வேங்கடம்
மேகின்றாய்! தண்துழாய் விரைநாறு கண்ணியனே! 2 ப. 6 தி. 10

பற்ப நாபன் உயர்வற வுயரும் பெருந்திறலோன்
எற்பரன் என்னையாக்கிக் கொண்டு எனக்கேதன்னைத்தந்த
கற்பகம் என்அமுதம் கார்முகில் போலும் வேங்கடநல்
வெற்பன் விசும்போர்பிரான் எந்தைதாமோதரனே 2 ப. 7 தி. 11

வார்புன லந்தணருவி வடதிரு வேங்கடத் தெந்தை
பேர்பல சொல்லிப்பிதற்றிப் பித்தரென்றேபிறர்கூற
ஊர்பல புக்கும் புகாதும் உலோகர் சிரிக்கநின்றாடி
ஆர்வம் பெருகிக்குனிப்பார் அமரர் தொழப்படுவாரே 3 ப. 5. தி. 8

சொன்னால் விரோதமிது ஆகிலும் சொல்லுவன் கேண்மினோ
என்னாவி லின்கவி யானொருவர்க்கும் கொடுக்கிலேன்
தென்னா தெனாவென்று வண்டுமுரல் திருவேங்கடத்து
என்னானை என்னப்பன் எம்பெருமான் உளனாகவே 3 ப. 9. தி. 1

மாரி மாறாததண்ணம்மலை வேங்கடத்தண்ணலை
வாரிமாறாதபைம்பூம்பொழில்சூழ் குருகூர்நகர்
காரிமாறன்சடகோபன் சொல்லாயிரத்து இப்பத்தால்
வேரிமாறாதபூமேலிருப்பாள் வினைதீர்க்குமே. 4 ப. 5 தி. 11

கட்டெழில்சோலை நல்வேங்கடவாணனைக்
கட்டெழில்தென்குருகூர்ச் சடகோபன்சொல்
கட்டெழிலாயிரத்து இப்பத்தும்வல்லவர்
கட்டெழில்வானவர் போகமுண்பாரே. 6 ப. 6 தி. 11

விண்மீதிருப்பாய் மலைமேல்நிற்பாய்! கடற்சேர்ப்பாய்!
மண்மீதுழல்வாய்! இவற்றுளெங்கும்மறைந்துறைவாய்!
எண்மீதியன்ற புறவண்டத்தாய்! எனதாவி
உள்மீதாடி உருக்காட்டாதே ஒளிப்பாயோ? 6 ப. 9 தி. 5

நங்கள்வரிவளையாயங்காளோ
நம்முடையேதலர்முன்புநாணி
நுங்கட்குயானொன்றுரைக்கும்மாற்றம்
நோக்குகின்றேனெங்கும் காணமாட்டேன்
சங்கம்சரிந்தனசாயிழந்தேன்
தடமுலைபொன்னிறமாய்த்தளர்ந்தேன்
வெங்கண்பறவையின் பாகன்எங்கோன்
வேங்கடவாணனைவேண்டிச்சென்றே. 8 ப. 2 தி. 1

இன்றிப்போக இருவினையும் கெடுத்து
ஒன்றியாக்கைபுகாமை உய்யக்கொள்வான்
நின்றவேங்கடம் நீள்நிலத்துஉள்ளது
சென்றதேவர்கள் கைதொழுவார்களே. 9 ப. 3 தி. 9

மேயான் வேங்கடம்
காயாமலர்வண்ணன்
பேயார்முலையுண்ட
வாயான்மாதவனே. 10 ப. 5 தி. 6

திருமாலிருஞ்சோலைமலையே திருப்பாற்கடலேஎன்தலையே
திருமால்வைகுந்தமே தண்திருவேங்கடமேஎனதுடலே
அருமாமாயத்துஎனதுயிரே மனமேவாக்கேகருமமே
ஒருமாநொடியும்பிரியான்என்ஊழிமுதல்வன்ஒருவனே 10 ப. 7 தி. 8

ஸ்ரீ

## திருவிருத்தம்

காண்கின்ற னகளும் கேட்கின்றனகளும் காணில்இந்நாள்
பாண்குன்ற நாடர் பயில்கின்றன இதெல்லாம்அறிந்தோம்
மாண்குன்ற மேந்திதண் மாமலை வேங்கடத்துஉம்பர்நம்பும்
சேண்குன்றம் சென்று பொருள்படைப் பான்கற்ற திண்ணனவே. 8

மாயோன் வடதிருவேங்கட நாடவல்லிக்கொடி காள்
நோயோ உரைக்கிலும் கேட்கின்றிலீர் உரையீர் நுமது
வாயோ? அதுவன்றி வல்வினை யேனும் கிளியுமெள்கும்
ஆயோ? அடும்தொண்டையோ? அறையோ! இதறிவரிதே. 10

கயலோ நுமகண்கள்? என்று களிறுவினவிநிற்றீர்
அயலோ ரறியிலும் ஈதென்ன வார்த்தை? கடல்கவர்ந்த
புயலோ டுலாங்கொண்டல் வண்ணன் புனவேங் கடத்தெம்மொடும்
பயலோ விலீர்கொல்லை காக்கின்ற நாளும் பலபலவே. 15

இசைமின்கள் தூதென்று இசைத்தால்இசையிலும் என்தலைமேல்
அசைமின்க ளென்றால் அசையும்கொலாம்? அம்பொன் மாமணிகள்
திசைமின் மிளிரும் திருவேங்கடத்துவன் தாள்சிமய
மிசைமின் மிளிரிய போவான் வழிக்கொண்ட மேகங்களே. 31

ஒண்ணுதல் மாமை யொளிப்பய வாமை விரைந்துநந்தேர்
நண்ணுதல் வேண்டும் வலவ கடாகின்று தேன்நவின்ற
விண்முதல் நாயகன் நீள்முடி வெண்முத்த வாசிகைத்தாய்
மண்முதல் சேர்வுற்று அருவிசெய் யாநிற்கும் மாமலைக்கே. 50

முலையோ முழுமுற்றும் போந்தில மொய்பூங் குழல்குறிய
கலையோ அரையில்லை நாவோ குழறும் கடல்மண்ணெல்லாம்
விலையோ வெனமிளி ரும்கண் இவள்பரமே? பெருமான்
மலையோ திருவேங்கட மென்று கற்கின்ற வாசகமே. 60

காவியும் நீலமும் வேலும் கயலும் பலபலவென்று
ஆவியின் தன்மை அளவல்ல பாரிப்பு அசுரைச்செற்ற
மாவியம் புள்வல்ல மாதவன் கோவிந்தன் வேங்கடம்சேர்
தூவியம் பேடையன் னாள் கண்க ளாய துணைமலரே. 67

உருகின்ற கன்மங்கள் மேலன ஓர்ப்பில ராய்இவளைப்
பெறுகின்ற தாயர் மெய்ந் நொந்து பெறார்கொல் துழாய் குழல்வாய்த்
துறுகின் றிலர்தொல்லை வேங்கட மாட்டவும் சூழ்கின்றிலர்
இறுகின்ற தால்இவளாகம் மெல்லாவி யெரிகொள்ளவே. 81

## பெரிய திருவந்தாதி

கல்லும் கனைகடலும் வைகுந்த வானாடும்
புல்லென் றொழிந்தனகொல்? ஏபாவம்! - வெல்ல
நெடியான் நிறம்கரியான் உள்புகுந்து நீங்கான்
அடியேனது உள்ளத்தகம். 68

ஸ்ரீ

## குலசேகரப்பெருமாள் அருளிச்செய்த பெருமாள் திருமொழி

## 4-ம் திருமொழி

ஊனேறு செல்வத்து உடற்பிறவி யான்வெண்டேன்
ஆனேறேழ் வென்றான் அடிமைத் திறமல்லால்
கூனேறு சங்கமிடத்தான்தன் வேங்கடத்துக்
கோனேரி வாழும் குருகாய்ப் பிறப்பேனே. 1

ஆனாத செல்வத்து அரம்பையர்கள் தற்சூழ
வானாளும் செல்வமும் மண்ணரசும் யான்வேண்டேன்
தேனார்பூஞ் சோலைத் திருவேங் கடச்சுனையில்
மீனாய்ப் பிறக்கும்விதியுடையே னாவேனே. 2

பின்னிட்ட சடையானும் பிரமனும் இந்திரனும்
துன்னிட்டுப் புகலரிய வைகுந்த நீள்வாசல்
மின்வட்டச் சுடராழி வேங்கடக்கோன் தானுமிழும்
பொன்வட்டில் பிடித்து உடனே புகப்பெறுவெனாவேனே. 3

ஒண்பவள வேலை யுலவுதண் பாற்கடலுள்
கண்துயிலும் மாயோன் கழலிணைகள் காண்பதற்குப்
பண்பகரும் வண்டினங்கள் பண்பாடும் வேங்கடத்துச்
செண்பகமாய் நிற்கும் திருவுடையெ னாவேனே. 4

கம்பமத யானைக் கழுத்தகத்தின் மேலிருந்து
இன்பமரும் செல்வமும் இவ்வரசும் யான்வேண்டேன்
எம்பெருமான் ஈசன் எழில்வேங் கடமலைமேல்
தம்பகமாய் நிற்கும் தவமுடையெ னாவேனே. 5

மின்னனைய நுண்ணிடையார் உருப்பசியும் மேனகையும்
அன்னவர்தம் பாடலோடும் ஆடலவை ஆதரியேன்
தென்னவென வண்டினங்கள் பண்பாடும் வேங்கடத்துள்
அன்னனைய பொற்குவடாம் அருந்தவத்தெ னாவேனே. 6

வானாளு மாமதிபோல் வெண்குடைக்கீழ் மன்னவர்தம்
கோனாகி வீற்றிருந்து கொண்டாடும் செல்வமறியேன்
தேனார்பூஞ் சோலைத் திருவேங் கடமலைமேல்
கானாறாய்ப் பாயும் கருத்துடையெ னாவேனே. 7

பிறையேறு சடையானும் பிரமனும் இந்திரனும்
முறையாய வேள்விக் குறைமுடிப்பான் மறையானான்
வெறியார்தண் சோலைத் திருவேங் கடமலைமேல்
நெறியாய்க் கிடக்கும் நிலையுடையெ னாவேனே. 8

செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே
நெடியானே! வேங்கடவா! நின்கோயி லின்வாசல்
அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும்
படியாய்க் கிடந்து உன் பவளவாய் காண்பேனே. 9

உம்பருல காண்டு ஒருகுடைக்கீழ் உருப்பசிதன்
அம்பொற் கலையல்குல் பெற்றாலும் ஆதரியேன்
செம்பவள வாயான் திருவேங்கடமென்னும்
எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனு மாவேனே. 10

மன்னியதண் சாரல் வடவேங் கடத்தான்தன்
பொன்னியலும் சேவடிகள் காண்பான் புரிந்திறைஞ்சிக்
கொன்னவிலும் கூர்வேல் குலசே கரன்சொன்ன
பன்னியநூல் தமிழ்வல்லார் பாங்காய பக்தர்களே. 11

*குலசேகரப் பெருமாள் திருவடிகளே சரணம்.*

ஸ்ரீ

## பெரியாழ்வார் திருமொழி

சுற்றும் ஒளிவட்டம் சூழ்ந்து சோதி பரந்தெங்கும்
எத்தனை செய்யினும் என்மகன் முகம்நே ரொவ்வாய்
வித்தகன் வேங்கடவாணன் உன்னை விளிக்கின்ற
கைத்தலம் நோவாமே அம்புலீ! கடிதோடிவா. 1 ப. 4 தி. 3

என்னிது மாயம்? என்னப்பன் அறிந்திலன்
முன்னைய வண்ணமே கொண்டு அளவாயென்ன
மன்னு நமுசியை வானில் சுழற்றிய
மின்னுமுடியனே! அச்சோவச்சோ வேங்கடவாணனே!
அச்சோவச்சோ. 1 ப. 9 தி. 8

தென்னிலங்கை மன்னன் சிரம்தோள் துணிசெய்து
மின்னிலங்குபூண் விபீடண நம்பிக்கு
என்னிலங்கு நாமத் தளவும் அரசென்ற
மின்னலங்காரற்கு ஓர்கோல் கொண்டுவா
வேங்கடவாணற்கு ஓர்கோல் கொண்டுவா. 2 ப. 6 தி. 9

மச்சொடு மாளிகை யேறி மாதர்கள் தம்மிடம் புக்குக்
கச்சொடு பட்டைக்கிழித்துக் காம்பு துகிலுவை கீறி
நிச்சலும் தீமைகள் செய்வாய்! நீள்திரு வேங்கடத்து எந்தாய்!
பச்சைத் தமனகத் தோடு பாதிரிப் பூச்சூட்ட வராய். 2 ப. 7 தி. 3

போதர்கண்டாஇங்கே போதர்கண்டாய்
போதரேனென்னாதேபோதர்கண்டாய்
ஏதேனும்சொல்லி அசலகத்தார்
ஏதேனும்பேசநான் கேட்கமாட்டேன்
கோதுகலமுடைக்குட்டனேயோ!
குன்றெடுத்தாய்! குடமாடு கூத்தா!
வேதப்பொருளே! என்வேங்கடவா!
வித்தகனே! இங்கேபோதராயே. 2 ப. 9 தி. 6

கடியார் பொழிலணி வேங்கடவா! கரும்போரேறே! நீயுகக்கும்
குடையும் செருப்பும் குழலும் தருவிக்கக் கொள்ளாதே போனாய்மாலே
கடியவெங்கானிடைக்கன்றின்பின்போன சிறுக்குட்டச்செங்கமல
அடியும்வெ தும்பி உன்கண் கள்சிவந்தாய்
அசைந்திட்டாய்நீ எம்பிரான்! 3ப. 3 தி. 4

சென்னியோங்கு தண்திருவேங்கடமுடையாய் உலகு
தன்னைவாழநின்றநம்பீ! தாமோதரா! சதிரா!
என்னையும்என்னுடைமையும் உன்சக்கரப்பொறியொற்றிக்கொண்டு
நின்னருளேபுரிந்திருந்தேன் இனிஎன்திருக்குறிப்பே! 5 ப. 4 தி. 1

*பெரியாழ்வார் திருவடிகளே சரணம்.*

ஸ்ரீ

## திருப்பாணாழ்வார் அருளிச்செய்த அமலனாதிபிரான்

அமலனாதிபிரான் அடியார்க்கு என்னையாட்படுத்த
விமலன் விண்ணவர்கோன் விரையார்பொழில்வேங்கடவன்
நிமலன் நின்மலன்நீதிவானவன் நீள்மதிளரங்கத்தம்மான் திருக்
கமலபாதம்வந்து என்கண்ணினுள்ளனவொக்கின்றதே.

மந்திபாய் வடவேங்கடமாமலை வானவர்கள்
சந்திசெய்யநின்றான் அரங்கத்தரவினணையான்
அந்திபோல்நிறத்தாடையும் அதன்மேலயனைப்படைத்ததோரெழில்
உந்திமேலதன்றோ அடியேனுள்ளத்தின்னுயிரே.

*திருப்பாணாழ்வார் திருவடிகளே சரணம்.*

ஸ்ரீ

## திருமங்கையாழ்வார் அருளிச்செய்த பெரியதிருமொழி

## 1-ம் பத்து 8-ம் திருமொழி

கொங்கலர்ந்த மலர்க்குருந்தம் ஒசித்தகோவலன் எம்பிரான்
சங்குதங்கு தடங்கடல் துயில் கொண்டதாமரைக் கண்ணினன்
பொங்குபுள்ளினை வாய்பிளந்த புராணர்தம்மிடம் பொங்குநீர்ச்
செங்கயல் திளைக்கும்சுனைத் திருவேங்கடம்அடைநெஞ்சமே. 1

பள்ளியாவது பாற்கடல்அரங்கம் இரங்கவன்பேய்முலை
பிள்ளையாய்உயிருண்டஎந்தை பிரானவன்பெருகுமிடம்
வெள்ளியான்கரியான் மணிநிறவண்ணனென்றெண்ணி நாள்தொறும்
தெள்ளியார்வணங்கும்மலைத் திருவேங்கடம்அடை நெஞ்சமே! 2

நின்றமாமருதுஇற்றுவீழ நடந்தநின்மலன்நேமியான்
என்றும்வானவர்கைதொழும் இணைத்தாமரையடியெம்பிரான்
கன்றிமாரிப்பொழிதிடக் கடிதாநிரைக்குஇடர்நீக்குவான்
சென்றுகுன்றமெடுத்தவன் திருவேங்கடம் அடைநெஞ்சமே! 3

பார்த்தற்காய் அன்றுபாரதம்கைசெய்திட்டு வென்றபரஞ்சுடர்
கோத்துஅங்குஆயர்தம்பாடியில்குரவைபிணைந்த எம்கோவலன்
ஏத்துவார்தம்மனத்துள்ளான் இடவெந்தைமேவிய எம்பிரான்
தீர்த்தநீர்த்தடஞ்சோலைசூழ் திருவேங்கடம்அடை நெஞ்சமே! 4

வண்கையான் அவுணர்க்குநாயகன் வேள்வியில்சென்று மாணியாய்
மண்கையால்இரந்தான் மராமரமேழும்எய்தவலத்தினான்
எண்கையான்இமயத்துள்ளான் இருஞ்சோலைமேவிய எம்பிரான்
திண்கைமாதுயர்தீர்த்தவன் திருவேங்கடம்அடைநெஞ்சமே! 5

எண்திசைகளும்ஏழுலகமும்வாங்கிப் பொன்வயிற்றில்பெய்து
பண்டுஓராலிலைப்பள்ளிகொண்டவன்பான்மதிக்குஇடர்தீர்த்தவன்
ஒண்திறலவுணனுரத் துகிர்வைத்தவன் ஒள்ளெயிற்றொடு
திண்திறலரியாயவன் திருவேங்கடம்அடைநெஞ்சமே! 6

பாரும்நீர்எரிகாற்றினோடு ஆகாசமும் இவையாயினான்
பேரும்ஆயிரம்பேசநின்ற பிறப்பிலிபெருகுமிடம்
காரும்வார்பனிநீள்விசும்பிடைச் சோருமாமுகில்தோய்தரச்
சேரும்வார்பொழில்சூழ் எழில்திருவேங்கடம்அடைநெஞ்சமே! 7

அம்பரம்அனல்கால்நிலம் சலமாகிநின்றஅமரர்கோன்
வம்புலாமலர்மேல் மலிமடமங்கைதன்கொழுநனவன்
கொம்பினன்ன இடைமடக்குறமாதர் நீளிதணந்தொறும்
செம்புனம்மவைகாவல்கொள் திருவேங்கடம் அடைநெஞ்சமே! 8

பேசுமின் திருநாமம்எட்டெழுத்தும் சொல்லிநின்று பின்னரும்
பேசுவார்தமைஉய்யவாங்கிப் பிறப்பறுக்கும்பிரானிடம்
வாசமாமலர்நாறுவார்பொழில் சூழ்தரும்உலகுக்கெல்லாம்
தேசமாய்த்திகழும்மலைத் திருவேங்கடம் அடைநெஞ்சமே! 9

செங்கயல்திளைக்கும்சுனைத் திருவேங்கடத்துறைசெல்வனை
மங்கையர்தலைவன்கலிகன்றி வண்தமிழ்ச்செஞ்சொல்மாலைகள்
சங்கையின்றித்தரித்துஉரைக்கவல்லார்கள் தஞ்சமதாகவே
வங்மாகடல்வையம்காவலாகி வானுலகாள்வாரே. 10

*திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.*

## 1-ம் பத்து 9-ம் திருமொழி

தாயேதந்தையென்றும் தாரமேகிளைமக்களென்றும்
நோயேபட்டொழிந்தேன் நுன்னைக்காண்பதோராசையினால்
வேயேய்பூம்பொழில்சூழ் விரையார்திருவேங்கடவா
நாயேன்வந்து அடைந்தேன் நல்கிஆளென்னைக்கொண்டருளே 1

மானேய்கண்மடவார் மயக்கிற்பட்டு. மாநிலத்து
நானேநானாவிதநரகம்புகும் பாவமசெய்தேன்
தேனேய்பூம்பொழில்சூழ் திருவேங்கடமாமலைஎன்
ஆனாய் வந்தடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே. 2

கொன்றேன்பல்லுயிரைக் குறிக்கோளொன்றிலாமையினால்
என்றேனும் இரந்தார்க்கு இனிதாக உரைத்தறியேன்
குன்றேய்மேகமதிர் குளிர்மாமலைவேங்கடவா
அன்றேவந்தடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே. 3

குலந்தானெத்தனையும் பிறந்தேயிறந்தெய்த்தொழிந்தேன்
நலந்தானொன்றுமிலேன் நல்லதோரறம்செய்துமிலேன்
நிலம்தோய்நீள்முகில்சேர் நெறியார்திருவேங்கடவா1
அலந்தேன்வந்தடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே. 4

எப்பாவம்பலவும் இவையே செய்து இளைத்தொழிந்தேன்
துப்பா: நின்னடியே தொடர்ந்தேத்தவும்கிற்கின்றிலேன்
செப்பார்திண்வரைசூழ் திருவேங்கடமாமலை என்
அப்பா : வந்தடைதேன் அடியேனை ஆட்கொண்டருளே 5

மண்ணாய்நீர்எரிகால் மஞ்சுலாவும் ஆகாசமுமாம்
புண்ணாராக்கைதன்னுள் புலம்பித்தளர்ந்து எய்த்தொழிந்தேன்
விண்ணார் நீள்சிகர விரையார் திருவேங்கடவா :
அண்ணா : வந்தடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே 6

தெரியேன்பாலகனாய்ப் பலதீமைகள் செய்துமிட்டேன்
பெரியேனாயினபின் பிறர்க்கேயுழைத்து ஏழையானேன்
கரிசேர்பூம்பொழில்சூழ் கனமாமலை வேங்கடவா :
அரியே ! வந்தடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே. 7

நோற்றேன் பல்பிறவி நுன்னைக்காண்பதோராசையினால்
ஏற்றேன் இப்பிறப்பே இடருற்றனன் எம்பெருமான்
கோல்தேன் பாய்ந்தொழுகும் குளிர்சோலைசூழ் வேங்கடவா !
ஆற்றேன் வந்தடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே 8

பற்றேல் ஒன்றுமிலேன் பாவமேசெய்து பாவியானேன்
மற்றேலொன்றறியேன் மாயனே! எங்கள்மாதவனே !
கல்தேன் பாய்ந்தொழுகு கமலச்சுனை வேங்கடா!
அற்றேன்வந்தடைந்தேன் அடியேனை ஆட்கொண்டருளே. 9

கண்ணாய் ஏழுலகுக்கு உயிராய் எங்கார் வண்ணனை
விண்ணோர்தாம்பரவும் பொழில்வேங்கடவேதியனை
திண்ணார்மாடங்கள்சூழ் திருமங்கையர்கோன்கலியன்
பண்ணார்பாடல்பத்தும் பயில்வார்க்கு இல்லை பாவங்களே. 10

*திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்*

## 1-ம் பத்து 10-ம் திருமொழி.

கண்ணார் கடல்சூழ் இலங்கைக்கு இறைவன்தன்
திண்ணா கம்பிளக்கச் சரம்செல உய்த்தாய் !
விண்ணோர் தொழும் வேங்கடமாமலையே
அண்ணா ! அடியே னிடரைக் களையாயே. 1

இலங்கைப் பதிக்கு அன்று இறையாய அரக்கர்
குலம்கெட்டு அவர்மாளக் கொடிப்புள் திரித்தாய் !
விலங்கல் குடுமித் திருவேங்க டம்மேய
அலங்கல் துளப முடியாய் ! அருளாயே. 2

நீரார் கடலும் நிலனும் முழுதுண்டு
ஏரால மிளந்தளிர் மேல் துயில் எந்தாய்
சீரார் திருவேங்கட மாமலை மேய
ஆரா வமுதே ! அடியேற்கு அருளாயே. 3

உண்டாய் உறிமேல் நறுநெய் அமுதாகக்
கொண்டாய் குறளாய் நிலம்ஈரடியாலே
விண்தோய் சிகரத் திருவேங்கடம்மேய
அண்டா ! அடியேனுக்கு அருள்புரி யாயே. 4

தூணாய் அதனூடு அரியாய்வந்து தோன்றிப்
பேணாஅவுண னுடலம் பிளந்திட்டாய் !
சேணார் திருவேங்கட மாமலைமேய
கோணாகணையாய்! குறிக்கொள்எனைநீயே. 5

மன்னா இம்மனிசப்பிறவியை நீக்கித்
தன்னாக்கித் தன்இன்னருள்செய்யும் தலைவன்
மின்னார்முகில்சேர் திருவேங்கடம்மேய
என்னானை என்னப்பன் என் நெஞ்சிலுளானே 6

மானேய்மட நோக்கித்திறத்து எதிர்வந்த
ஆனேழ்விடைசெற்ற அணிவரைத்தோளா!
தேனே ! திருவேங்கடமாமலைமேய
கோனே ! என்மனம்குடிகொண்டிருந்தாயே. 7

சேயன் அணியன் என்சிந்தையுள் நின்ற
மாயன் மணிவாளொளி வெண்தரளங்கள்
வேய்விண்டுதிர் வேங்கடமாமலைமேய
ஆயனடியல்லது மற்றறியேனே. 8

வந்தாய் என்மனம்புகுந்தாய் மன்னிநின்றாய்!
நந்தாதகொழுஞ்சுடரே ! எங்கள் நம்பீ !
சிந்தாமணியே ! திருவேங்கடம்மேய
எந்தாய்! இனியான் உன்னை என்றும்விடேனே. 9

வில்லார்மலி வேங்கடமாமலைமேய
மல்லார்திரள்தோள் மணிவண்ணனம்மானைக்
கல்லார்திரள்தோள் கலியன்சொன்னமாலை
வல்லாரவர் வானவராகுவர்தாமே. 10

*திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்*

## 2-ம் பத்து 1-ம் திருமொழி.

வானவர் தங்கள் சிந்தைபோல என்நெஞ்சமே! இனிதுவந்து மாதவ
மானவர் தங்கள் சிந்தை அமர்ந்துறைகின்ற எந்தை
கானவரிடுகாரகில்புகை ஓங்குவேங்கடம்மேவி மாண்குற
ளான அந்தணற்கு இன்று அடிமைத்தொழில் பூண்டாயே. 1

உறவுசுற்றமென்றொன்றிலா ஒருவன் உகந்தவர் தம்மைமண்மிசைப்
பிறவியேகெடுப்பான் அதுகண்டு என் நெஞ்சமென்பாய் !
குறவர்மாதர்களோடு வண்டுகுறிஞ்சிமருளிசைபாடும் வேங்கடத்து
அறவநாயகற்கு இன்று அடிமைத்தொழில்பூண்டாயே. 2

இண்டையாயினகொண்டு தொண்டர்களேத்துவாருறவோடும்
வானிடைக்
கொண்டுபோயிடவும் அதுகண்டுஎன்நெஞ்சமென்பாய் !
வண்டுவாழ்வடவேங்கடமலை கோயில்கொண்ட
தனோடும்மீமிசை
அண்டமாண்டிருப்பாற்கு அடிமைத்தொழில் பூண்டாயே. 3

பாவியா துசெய்தாய் என்நெஞ்சமே! பண்டுதொண்டுசெய்தாரை
மண்மிசை
மேவிஆட்கொண்டுபோய் விசும்பேறவைக்கும் எற்தை
கோவிநாயகன்கொண்டலுந்துயர் வேங்கடமலையாண்டு வானவர்
ஆவியாயிருப்பாற்கு அடிமைத்தொழில் பூண்டாயே. 4

பொங்குபோதியும்பிண்டியும்முடைப் புத்தர்நோன்பியர் பள்ளி
யுள்ளுறை
தங்கள்தேவரும் தாங்களுமேயாக என்நெஞ்சமென்பாய் !
எங்கும்வானவர்தானவர்நிறைந்தேத்தும் வேங்கடம்மேவி நின்றருள்
அங்கணாயகற்கு இன்று அடிமைத்தொழில் பூண்டாயே 5

துவரியாடையர் மட்டையர் சமண்தொண்டர்கள்மண்டியுண்டுபின்னரும்
தமரும்தாங்களுமேதடிக்க என்நெஞ்சமென்பாய் !
கவரிமாக்கணம்சேரும் வேங்கடம்கோயில்கொண்ட கண்ணார்
விசும்பிடை
அமரநாயகர்க்கு இன்று அடிமைத்தொழில் பூண்டாயே. 6

தருக்கினால் சமண்செய்து சோறுதண்தயிரினால்திரளை மிடற்றிடை
நெருக்குவாரலக்கணதுகண்டு என்நெஞ்சமென்பாய் !
மருட்கள்வண்டுகள்பாடும் வேங்கடம்கோயில்கொண்டதனோடும்
வானிடை
அருக்கண்மேவிநிற்பார்க்கு அடிமைத்தொழில் பூண்டாயே. 7

சேயன் அணியன்சிறியன்பெரியனென்பதும் சிலர்பேசக்கேட்டிருந்
தே என்நெஞ் மென்பாய்! எனக்கு ஒன்று சொல்லாதே
வேய்கள்நின்றுவெண்முத்தமேசொரி வேங்கடமலைகோயில் மேவிய
ஆயர்நாயகற்கு இன்று அடிமைத்தொழில் பூண்டாயே. 8

கூடியாடியுரைத்ததேஉரைத்தாய் என்நெஞ்சமென்பாய்! துணிந்துகேள்
பாடியாடிப்பலரும் பணிந்தேத்திக்காண்கிலா
ஆடுதாமரையோனும்ஈசனும் அமரர்கோனும் நின்றேத்தும்வேங்கடத்து
ஆடுகூத்தனுக்கு இன்று அடிமைத்தொழில் பூண்டாயே. 9

மின்னுமாமுகில்மேவு தண்திருவேங்கடமலைகோயில்மேவிய
அன்னமாய்நிகழ்ந்த அமரர்பெருமானைக்
கன்னிமாமதிள்மங்கையர்கலிகன்றி இன்தமிழாலுரைத்த இம்
மன்னுபாடல்வல்லார்க்கு இடமாகும்வானுலகே. 10

*திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.*

## ஸ்ரீ பெரிய திருமொழி.

அன்றிய வாண னாயிரம் தோளும்
துணிய அன்று ஆழிதொட்டானை
மின்திகழ் குடுமி வேங்கட மலைமேல்
மேவிய வேதநல் விளக்கை
தென்திசைத் திலத மனையவர் நாங்கைச்
செம்பொன்செய் கோயிலி னுள்ளே
மன்றது பொலிய மகிழ்ந்துநின் றானை
வணங்கிநான் வாழ்ந்தொழிந்தேனே 4.ப.3 தி.8

வேடார்திருவேங்கடம் மேயவிளக்கே!
நாடார்புகழ் வேதியர்மன்னியநாங்கூர்
சேடார்பொழில்சூழ் திருவெள்ளக்குளத்தாய்!
பாடாவருவேன் வினையாயினபாற்றே. 4.ப. 7 தி.5

வாம்பரியுகமன்னர் தம்உயிர்செக ஐவர்கட்குஅரசளித்த
காம்பினார் திருவேங்கடப்பொருப்ப: நின்காதலைஅருள் எனக்கு
மாம்பொழில்தளிர் கோதியமடக்குயில் வாயது துவர்ப்பெய்தத்
தீம்பலங்கனித்தேனதுநுகர் திருவெள்ளறை நின்றானே 5.ப.3.தி.4.

வெருவாதாள்வாய்வெருவி
வேங்கடமே! வேங்கடமே! என்கின்றாளால்
மருவாளால்என்குடங்கால் வாள்நெடுங்கண்
துயில்மறந்தாள் வண்டார்கொண்ட
லுருவாளன்வானவர்தமுயிராளன்
ஒலிதிரைநீர்ப்பெளவம்கொண்ட
திருவாளன் என்மகளைச்செய்தனகள்
எங்ஙனம்நான் சிந்திக்கேனே? 5.ப. 5.தி.1

சிந்தனையைத்தவநெறியைத் திருமாலைப்பிரியாது
வந்துஎன்மனத்து இருந்த வடமலையை வரிவண்டார்
கொந்தணைந்தபொழிற்கோவல் உலகளப்பான்அடி நிமிர்த்த
அந்தணனை யான்கண்டது அணிநீர்த்தென்ன ரங்கத்தே. 5.ப.6.தி.7

மான்கொண்ட தோல் மார்வில் மாணியாய் மாவலிமண்
தான்கொண்டு தாளாலளந்தபெருமானைத்
தேன்கொண்டசாரல் திருவேங்கடத்தானை
நான்சென்றுநாடி நறையூரில் கண்டேனே. 6.ப.8தி.1

ஆங்குவெந்நகரத்து அழுந்தும்போது
அஞ்சேலென்று அடியேனை அங்கேவந்து
தாங்கு தாமரையன்னபொன்னாரடி
எம்பிரானை உம்பர்க்கணியாய்நின்ற

வேங்கடத்தரியைப்பரிகீறியை

வெண்ணெயுண்டு உரலினிடையாப்புண்ட

தீங்கரும்பினைத் தேனைநன்பாலினையன்றி

என்மனம்சிந்தைசெய்யாதே. 7.ப.3.தி.5

எங்களுக்கு அருள்செய்கின்ற ஈசனை

வாசவார்குழலாள்மலைமங்கைதன்

பங்கனைப் பங்கில்வைத்துகந்தான் தன்னைப்

பான்மையைப்பனிமாமதியம்தவழ்

மங்குலைச்சுடரைவடமாமலை

யுச்சியை நச்சிநாம்வணங்கப்படும்

கங்குலைப் பகலைச்சென்றுநாடிக்

கண்ண மங்கையுள்கண்டுகொண்டேனே. 7.ப.10.தி.3

அருவிசோர் வேங்கடம் நீர்மலையென்றுவாய்

வெருவினாள் மெய்யம் வினவியிருக்கின்றாள்

பெருகுசீர்க் கண்ணபுரமென்றுபேசினாள்

உருகினாள் உள்மெலிந்தாள் இது என்கொலோ? 8.ப.2.தி.3

பண்ணுலாமென்மொழிப்பாவைமார்

பணைமுலையணைதும்நா மென்று

எண்ணுவாரெண்ணமதொழித்து நீபிழைத்துயக்கருதினாயேல்

விண்ணுளார்விண்ணின்மீதியன்ற வேங்கடத்துளார்

வளங்கொள் முந்நீர்

வண்ணனார்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய்மருவு நெஞ்சே!

9.ப.7.தி.4

வலம்புரியாழியனை வரையார்திரள்தோளன்தன்னைப்

புலம்புரிநூலவனைப் பொழில் வேங்கடவேதியனைச்

சிலம்பியலா றுடைய திருமாலிருஞ்சோலைநின்ற

நலந்திகழ்நாரணனை நணுகுங்கொல்? என்நன்னுதலே 9.ப.9.தி.9

பொன்னைமாமணியை அணியார்ந்ததோர்
மின்னை வேங்கடத்து உச்சியிற் கண்டுபோய்
என்னையாளுடை ஈசனை எம்பிரான்
தன்னையாம்சென்று காண்டும் தண்காவிலே. 10.ப.1தி.2

சொல்லாய் பைங்கிளியே !
சுடராழி வலனுயர்த்த
மல்லார்தோள் வடவேங்கடவனைவரச்
சொல்லாய் பைங்கிளியே. 10.ப.10.தி.5

கண்ணன்மனத் துள்ளேநிற்கவும் கைவளைகள்
என்னோகழன்ற? இவைஎன்னமாயங்கள்?
பெண்ணானோம் பெண்மையோம் நிற்க அவன்மேய
அண்ணல்மலையும் அரங்கமும்பாடோமே. 11.ப.3.தி.7

கள்ளத்தால்மாவலியை மூவடிமண்கொண்டளந்தான்
வெள்ளத்தான் வேங்கடத்தான் என்பரால்காணேடீ !
வெள்ளத்தான் வேங்கடத்தானேலும் கலிகன்றி
உள்ளத்திலுள்ளே உளன்கண்டாய்சாழலே 11.ப.5.தி.10

## திருக்குறுந்தாண்டகம்

இம்மையை மறுமை தன்னை எமக்குவீ டாகி நின்ற
மெய்ம்மையை விரிந்த சோலை வியன்திரு வரங்கம் மேய
செம்மையைக் கருமை தன்னைத் திருமலை ஒருமை யானைத்
தன்மையை நினைவார் என்தன் தலைமிசை மன்னு வாரே 7

## திருநெடுந்தாண்டகம்

நீரகத்தாய் நெடுவரையி னுச்சி மேலாய்
நிலாத்திங்கள் துண்டத்தாய்! நிறைந்தகச்சி
ஊரகத்தாய்! ஒண்துறைநீர் வெஃகா உள்ளாய்
உள்ளுவா ருள்ளத்தாய்! உலகமேத்தும்

காரகத்தாய்! கார்வானத்துள்ளாய்! கள்வா!
காமருபூங் காவிரியின் தென்பால் மன்னு
பேரகத்தாய் பேராதுஎன் னெஞ்சி னுள்ளாய்!
பெருமான்! உன் திருவடியே பேணி னேனே. 8

வங்கத்தால் மாமணிவந் துந்து முந்நீர்
மல்லையாய் மதிள்கச்சி யூராய் பேராய்
கொங்கத்தார் வளங்கொன்றை யலங்கல் மார்வன்
குலவரையன் மடப்பாவை இடப்பால் கொண்டான்
பங்கத்தாய்! பாற்கடலாய் பாரின்மேலாய்
பனிவரையி னுச்சியாய்! பவள வண்ணா
எங்குற்றாய்? எம்பெருமான்! உன்னை நாடி
ஏழையேன் இங்ஙனமே உழிதருகேனே 9

கன்றுமேய்த்து இனிதுகந்த காளாய் என்றும்
கடிபொழில்சூழ் கணபுரத்துஎன் கனியே! என்றும்
மன்றமரக்கூத்தாடி மகிழ்ந்தாய்! என்றும்
வடதிருவேங்கடமேய மைந்தா என்றும்
வென்றசுரர் குலம்களைந்த வேந்தே! என்றும்
விரிபொழில்சூழ் திருநறையூர் நின்றாய் என்றும்
துன்றுகுழல் கருநிறத்துஎன் துணையே! என்றும்
துணைமுலைமேல் துளிசோரச் சோர்கின் றாளே. 16

## சிறிய திருமடல்



## பெரிய திருமடல்



*திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்*

❄ ❄ ❄

ஸ்ரீ

## ஸ்ரீஆண்டாள் அருளிச் செய்த நாச்சியார் திருமொழி.

## 8-ம் திருமொழி.

விண்ணீல மேலாப்பு விரித்தாற்போல் மேகங்காள் !
தெண்ணீர்பாய் வேங்கடத்துஎன் திருமாலும் போந்தானே?
கண்ணீர்கள் முலைக்குவட்டில் துளிசோரச் சோர்வேனைப்
பெண்ணீர்மை யீடழிக்கும் இது தமக்குஓர் பெருமையே. 1

மாமுத்த நிதிசொரியும் மாமுகில் காள்! வேங்கடத்துச்
சாமத்தினிறங்கொண்ட தாடாளன் வார்த்தையென்னே
காமத்தீயுள்புகுந்து கதுவப்பட்டு இடைக்கங்குல்
ஏமத்தோர் தென்றலுக்கு இங்கிலக்காய் நானிருப்பேனே. 2

ஒளிவண்ணம் வளைசிந்தை உறக்கத்தோடு இவையெல்லாம்
எளிமையால் இட்டுஎன்னை ஈழியப் போயினவால்
குளிரருவி வேங்கடத்துஎன் கோவிந்தன் குணம்பாடி
அளியத்த மேகங்காள்! ஆவிகாத் திருப்பேனே. 3

மின்னாகத் தெழுகின்ற மேகங்காள் ! வேங்கடத்துத்
தன்னாகத் திருமங்கை தங்கியசீர் மார்வர்க்கு
என்னாகத் திளங்கொங்கை விரும்பித்தாம் நாள்தோறும்
பொன்னாகம் புல்குதற்குஎன் புரிவுடைமை செப்புமினே 4

வான்கொண்டு கிளர்ந்தெழுந்த மாமுகில்காள்! வேங்கடத்துத்
தேன்கொண்ட மலர்சிதறத் திரண்டேறிப் பொழிவீர்காள்!
ஊன்கொண்ட வள்ளுகிரால் இரணியனை உடலிடந்தான்
தான்கொண்ட சரிவளைகள் தருமாகில் சாற்றுமினே 5

சலங்கொண்டு கிளர்தெழுந்த தண்முகில்காள்! மாவலியை
நிலங்கொண்டான் வேங்கடத்தே நிரந்தேறிப் பொழிவீர்காள்!
உலங்குண்ட விளங்கனிபோல் உள்மெலியப் புகுந்துஎன்னை
நலங்கொண்ட நாரணற்குஎன் நடலைநோய் செப்புமினே 6

சங்கமா கடல்கடைந்தான் தண்முகில்காள்! வேங்கடத்துச்
செங்கண்மால் சேவடிக்கீழ் அடிவீழ்ச்சி விண்ணப்பம்
கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பழியப் புகுந்து ஒருநாள்
தங்குமேல் என்னாவி தங்குமென்று உரையீரே. 7

கார்காலத் தெழுகின்ற கார்முகில்காள்! வேங்கடத்துப்
போர்காலத் தெழுந்தருளிப் பொருதவனார் பேர்சொல்லி
நீர்காலத்து எருக்கினம் பழவிலைபோல் வீழ்வேனை
வார்காலத்து ஒருநாள்தம் வாசகம்தந் தருளாரே. 8

மதயானை போலெழுந்த மாமுகில்காள்! வேங்கடத்தைப்
பதியாக வாழ்வீர்காள் பாம்பணையான் வார்த்தை யென்னே
கதியென்றும் தானாவான் கருதாது ஓர் பெண்கொடியை
வதைசெய்தானென்னும்சொல் வையகத்தார் மதியாரே. 9

நாகத்தி னணையானை நன்னுதலாள் நயந்துஉரைசெய்
மேகத்தை வேங்கடக்கோன் விடுதூதில் விண்ணப்பம்
போகத்தில் வழுவாத புதுவையர்கோன் கோதைதமிழ்
ஆகத்து வைத்துரைப் பாரவர்அடியா ராகுவரே.

*ஆண்டாள் திருவடிகளே சரணம்.*

## ஆண்டாள் அருளிச்செய்த நாச்சியார் திருமொழி.

தையொரு திங்களும் தரைவிளக்கித்
தண்மண்டலமிட்டு மாசிமுன்னாள்
ஐயநுண் மணற்கொண்டு தெருவணிந்து
அழகினுக்கலங்கரித்து அனங்கதேவா!
உய்யவு மாங்கொலோ வென்று சொல்லி
உன்னையும் உம்பியையும் தொழுதேன்
வெய்யதோர் தழலுமிழ் சக்கரக்கை
வேங்கடவற்கு என்னை விதிக்கிற்றியே. 1.தி.1

மத்தநன் னறுமலர் முருக்க மலர்கொண்டு
முப்போதும் உன்னடி வணங்கி
தத்துவ மிலியென்று நெஞ்செரிந்து
வாசகத் தழித்து உன்னை வைதிடாமே
கொத்தலர் பூங்கணை தொடுத்துக்கொண்டு
கோவிந்த னென்பதோர் பேரெழுதி
வித்தகன் வேங்கட வாணனென்னும்
விளக்கினில் புக என்னை விதிக்கிற்றியே 1.தி.3

காட்டில் வேங்கடம் கண்ண புரநகர்
வாட்டமின்றி மகிழ்ந்துறை வாமனன்
ஓட்டாரா வந்து என் கைப்பற்றித் தன்னொடும்
கூட்டு மாகில் நீ கூடிடு கூடலே ! 4.தி.3

வெல்லை விளிசங்கு இடங்கையில் கொண்ட
விமலன் எனக்கு உருக்காட்டான்
உள்ளம் புகுந்து என்னைநைவித்து
நாளும் உயிர்பெய்து கூத்தாட்டுக்காணும்
கள்ளவிழ் செண்பகப் பூமலர் கோதிக்
களித்திசை பாடும் குயிலே
மெள்ளவிருந்து மிழற்றி மிழற்றாதுஎன்
வேங்கட வன்வரக் கூவாய். 5.தி.2

பாடும் குயில்காள் ! ஈதுஎன்ன பாடல்? நல்வேங்கட
நாடர்நமக்குஒருவாழ்வு தந்தால் வந்துபாடுமின்
ஆடும் கருளக் கொடியுடையார் வந்துஅருள்செய்து
கூடுவராயிடில் கூவிநும்பாட்டுக்கள் கேட்டுமே. 10.தி.5

மழையே ! மழையே! மண்புறம்பூசி உள்ளாய் நின்று
மெழுகூற்றினாற்போல் ஊற்றுநல்வேங்கடத்துள் நின்ற
அழகப் பிரானார்தம்மை என்னெஞ்சத்தகப்படத்
தழுவிநின்று என்னைத்ததைத்துக்கொண்டு ஊற்றவும் வல்லையே? 10.தி.8

*ஆண்டாள் திருவடிகளே சரணம்.*

## ஸ்ரீ திருவரங்கத்தமுதனார் அருளிச்செய்த இராமானுச நூற்றந்தாதி

நின்றவண் கீர்த்தியும் நீள்புன லும், நிறை வேங்கடப்பொற்
குன்றமும் வைகுந்த நாடும் குலவிய பாற்கடலும்
உன்தனக்கு எத்தனை யின்பந் தரும் உன் னிணைமலர்த்தாள்
என்தனக் கும்அது, இராமா னுச!இவை யீந்தருளே 76

இருப்பிடம் வைகுந்தம் வேங்கடம், மாலிருஞ் சோலையென்னும்
பொருப்பிடம், மாயனுக் கென்பர்நல் லோர், அவை தம்மொடும்வந்து
இருப்பிடம் மாயன் இராமானுசன்மனத்துஇன்று அவன்வந்து
இருப்பிடம் என்றன் இதயத்துள்ளே தனக்கின்புறவே. 106

*திருவரங்கத்தமுதனார் திருவடிகளே சரணம்.*

## ஸ்ரீ நிகமாந்த மஹாதேசிகன் அருளிச்செய்தது

கண்ணனடி யிணையெமக்குக் காட்டும் வெற்பு
கடுவினைய ரிருவினையும் கடியும் வெற்பு
திண்ணமிது வீடென்னத் திகழும் வெற்பு
தெளிந்தபெருந் தீர்த்தங்கள் செறிந்த வெற்பு
புண்ணியத்தின் புகலிதென்னப் புகழும் வெற்பு
பொன்னுலகில் போகமெல்லாம் புணர்க்கும் வெற்பு
விண்ணவரும் மண்ணவரும் விரும்பும் வெற்பு
வேங்கடவெற் பெனவிளங்கும் வேத வெற்பே

(அதிகாரஸங்க்ரஹம்-43)

*ஸ்ரீநிகமாந்த மஹாதேசிகன் திருவடிகளே சரணம்*

## ஸ்ரீ மணவாள மாமுனிகள் அருளிச்செய்த திருவாய் நூற்றந்தாதி

ஒழிவிலாக் காலம் உடனாகி மன்னி
வழுவிலா ஆட்செய்ய மாலுக்கு - எழுசிகர
வேங்கடத்துப் பாரித்த மிக்கநலஞ்சேர் மாறன்
பூங்கழலை நெஞ்சே! புகழ் 23

உலகுய்ய மால்நின்ற யுயர் வேங்கடத்தே
அலர்மகளை முன்னிட்டவன்றன் - மலரடியே
வன் சரணாய்ச் சேர்ந்த மகிழ்மாறன்றாளிணையே
உன் சரணாய் நெஞ்சமே! உள். 60

*ஜீயர் திருவடிகளே சரணம்.*